[14th February 1959

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I have not received any such suggestion from consumers' co-operative societies. If co-operative societies make a specific proposal, that will be looked into.

SRI A. A. RASHEED : Sir, is there any proposal to allow more flour mills to be opened in our State to overcome the shortage in maida?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. If the private sector comes forward to open more flour mills, that will be considered.

### *S.S.L.C. Examination*

* 322 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்க தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கடந்த எஸ்.எஸ்.எல்.சி. பரீக்ஷையில் ஆங்கிலத்தில் தேறியவர்கள் எத்தனை பேர் ?

(ஆ) ஆங்கிலத்தில் தவறியவர்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) Under the S.S.L.C. Scheme there is no 'pass' or 'fail' in any particular subject of the S.S.L.C. Examination. It is, therefore, not possible to say how many candidates 'passed' or 'failed' in English in the S.S.L.C. Examination held in March 1958.

SRI A. VEDARATHNAM : ஆங்கிலம் என்ற ஒரு பாடத்தில் மாத்திரம் மார்க் குறைவாக வாங்கியதன் காரணமாக ஏராளமான மாணவர்கள் பரீக்ஷியில் தவறிப்போகும் விஷயம் கனம் மந்திரி அவர்களுக்குத் தெரியுமா ? அப்படியிருந்தால் அதன் காரணத்தை ஆராய்ந்து, அதாவது போதனையின் திறமை குறைவா அல்லது ஆங்கில பாடங்கள் கடுமையாக இருப்பது காரணமா என்பதை ஆராய்ந்து அதற்குத் தகுந்த பரிகாரம் தேட அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆங்கில பாடத்தில் பலர் தவறி விடுகிறுர்கள் என்பது வாஸ்தவம் தான். ஆங்கிலத்தை இன்னும் நல்ல முறையில் போதிப்பதற்கு இப்பொழுது பல ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister, Sir, what steps the Government have taken to improve the standard of English in the high schools?

THE HON. SRI C. SUBRAMANIAM : நல்ல முறையில் ஆங்கிலத்தை போதிப்பதற்கு புதிய முறைகளை ஆசிரியர்களுக்குச் சொல்லிக் கொடுக்க பல முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. அதன் பிறகு ஆங்கிலத்தின் தரம் உயருவதற்கு வழி ஏற்படும்.

SRI K. SATTANATHA KARAYALAR : ஆங்கிலத்தில் தேர்வு அடைவதற்கு எவ்வளவு சதமானம் வேண்டும், தமிழில் தேர்வு அடைய எத்தனை சதமானம் வேண்டும், சர்வகலாசாலையில் சேருவதற்கு இவைகளில் எத்தனை சதமானம் தேவை. மற்றும் உயர்தர பள்ளிக்கூடங்களில் சேருவதற்கு எத்தனை சதமானம் தேவை என்பதை அறிவிக்க முடியுமா ?

14th February 1959]

**MR. SPEAKER :** இதற்கு தனி கேள்வி போட வேண்டும்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** ஆங்கிலத்தில் தேர்வு அடைய 40 பர்செண்ட் வேண்டும் என்று நினைக்கிறேன். மற்றவைகளில் 30 அல்லது 35 பர்செண்ட் என்று நினைக்கிறேன். தனியாக கேள்வி போட்டால் விவரம் சேகரித்துச் சொல்லுகிறேன்.

**SRI A. VEDARATHNAM :** ஆங்கிலத்தில் திறமையாக போதனை நடைபெறுவதற்காக செய்யப்படுகிற முயற்சிகள் என்ன, அதன் திட்டம் என்ன என்பதை அறிவிக்க முடியுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இப்பொழுது பல ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்களையும் உயர்தரப் பள்ளிகளில் இருக்கும் ஆசிரியர்களையும் கொண்ட ஒரு செமினார் நடத்த அங்கே ஆங்கில போதனையில் வல்லவர்களைக் கொண்டு அவர்களுக்கு ஆங்கிலத்தில் பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. அத்துடன் ஆங்கிலத்தில் நல்ல முறையில் பயிற்சி அளிக்கக்கூடிய ஆசிரியர்களைக் கொண்டு போதனை செய்து அவைகளை கிராமபோன் ரிகார்டுகளில் எடுத்து அதன்மூலமாக பாடங்களைச் சொல்லிக் கொடுக்கவும் ஏற்பாடுகள் நடந்து கொண்டு வருகின்றன.

**SRI S. NAGARAJA MONIGAR :** சார், இம்மாதிரி சமீப காலத்தில் ஆங்கிலத்தின் தரம் குறைவாகப் போனதன் காரணம் இதர 'பாரங்களில்' தமிழிலேயோ அல்லது பிராந்திய மொழியிலேயோ போதிப்பதும், மற்ற மொழிகளின் மீது ஒரு வெறுப்பை ஏற்படுத்தியதும் தான் காரணம் என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் அறிவார்களா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** போதனை மொழி எதுவாக இருக்க வேண்டும் என்பதில் சர்ச்சை இல்லை. எந்த மொழியில் பயிலுவதாக இருந்தாலும் அந்த மொழியில் ஒரு தரம் இருக்க வேண்டும் என்று விதி வைத்திருக்கிறோம். அந்தத் தரத்திற்கு வரக்கூடிய அளவுக்குப் போதனை செய்ய வேண்டும் என்று முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது.

**SRI T. S. RAMASWAMY PILLAI :** ஆங்கில போதனை சரியானபடி நடப்பதற்கு அரசாங்கம் நல்ல பிழையற்ற பாட புத்தகங்களை வெளியிட உத்தேசித்திருக்கிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இப்பொழுது பாட புஸ்தகங்களில் அதிகமாகப் பிழை இருக்கும் காரணத்தால் தரம் குறைந்து விட்டது என்று சொல்ல முடியாது. போதிப்பதிலே சில குறைகள் இருப்பதால் தரம் குறைந்து விட்டது என்று கருதப்படுகிறது. ஆகையால் இப்பொழுது அதற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. இப்பொழுது 5-ம் வகுப்பில் இருந்தே ஆங்கிலம் சொல்லித்தர ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இப்பொழுது தயார் செய்துள்ள புதிய பாடத் திட்டத்தை ரொம்பவும் சிறந்தது என்று எல்லா ஆங்கில நிபுணர்களும் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள்.

*Water-supply Scheme for Tenkasi*

* 323 *Q.*—**SRI K. SATTANATHA KARAYALAR :** Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the stage at which the work of Tenkasi Water-supply Scheme is; and

(*b*) whether the work is progressing according to schedule?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** (*a*) Eighty per cent of the work of laying of conveying mains forming the first stage of the scheme has been completed.